# 19

# நட்பு

இடைவேளை.

"ஆர்ட்ஃபிலிம் கணக்கா படம் வந்திருக்கு, அவசியம் பாருங்க சாரங்கன்' என்று படத் தயாரிப்பாள நண்பர் தொணதொணத் ததை நம்பிக்கொண்டு வந்தது தப்பாகப் போய்விட்டது. படம் ரொம்ப சுமார். கொஞ்சம் அழுகை, கொஞ்சம் வசனம், கொஞ்சம் தமிழ் பண்பாடு, கொஞ்சம் கிராமம், கொஞ்சம் இளசுகளின் காதல் என்று சம்பந்தா சம்பந்தமில்லாத சம்பவங்களின் கூட்டு.

எழுந்து போய்விடலாமா?

ஜிப்பாவைப் பின்னுக்குத் தள்ளி மணி என்ன என்று பார்த்த நிமிஷத்தில் அவன் என் எதிரில் வந்து நின்றான்.

"வணக்கம். நீங்க தானே...?"

அவன் கேள்வியை முடிக்கும் முன்னரே, என்ன கேட்கப் போகிறான் என்பதைப் புரிந்துகொண்ட தினுசில் லேசான புன்னகையுடன் தலையாட்டி எதிரில் நின்றவனை ஏறிட்டேன்.

எனக்குச் சின்னவனாகத்தான் இருப்பான். முப்பத்தைந்து இருந்தால் அதிகம். ஆண் பிள்ளைக்கு கொஞ்சம் குட்டை. நல்ல நிறம். தடித்த உதடுகள். கறுப்பு மீசை. மைனஸ் இரண்டு என்று சொல்லும் கண்ணாடி.

என்னைப் பார்த்ததில் அவனுக்குள் சின்னதாக படபடப்பு, சந்தோஷம் உண்டாகியிருந்தது வெளிப்படையாகத் தெரிந்தது.

காலியாக இருந்த பக்கத்து இருக்கையில் தயக்கத்துடன் உட்கார்ந்தான். நிறைய சிரித்தான்.

ஒரு முறை வணக்கம் சொல்லிவிட்டதை மறந்து இன்னொரு முறை "வணக்கம்" என்று சொல்ல, சிரிப்பை அடக்கிக்கொண்டு நானும் பதிலுக்கு 'வணக்கம்' என்றேன்.

"என் பேர் பத்மநாபன், இந்த ஊர் பாங்குக்கு புது ஏஜெண்டா வந்திருக்கேன். ரெண்டு நாள் ஆறது. ஹோட்டல்லே தங்கி இருக்கேன். ஃபாமிலி மெட்றாஸ்லே இருக்கு—நல்லதா வீடு கிடைச்ச உடனே அவங்களை வரவழிச்சிடுவேன்..."

நான் என்ன பதில் சொல்ல வேண்டும் என்று அவன் எதிர் பார்க்கிறான் என்று யோசித்துக்கொண்டே "அப்படியா"— என்றேன்.

"என் வொய்ஃப் ஸ்வர்ணாவுக்கு உங்க எழுத்துக்கள்னா உயிர். உங்க கதைகள் வெளியாற பத்திரிகைகள் ஒண்ணு விட மாட்டா. தேடித்தேடி வாங்கிட்டு வந்து படிச்சிட்டு 'இத இப்படி எழுதியிருக்காரு—அதை அப்படி எழுதி இருக்காரு'னு எனக்கு விவரமா சொல்லுவா...நம்ப மாட்டீங்க நீங்க, ஒரோரு சமயம் நடு ராத்திரிலே எழும்பி உட்கார வைச்சி, 'அடடா, என்னமா எழுதியிருக்காரு'னு விமர்சனம் பண்ணதுகூட உண்டு, சார்..."

லேசான முறுவலுடன் "அப்படியா?" என்றேன் திரும்ப.

"இந்த ஊருக்கு ட்ரான்ஸ்பர் ஆர்டர் வந்தப்புறம்— 'மிஸ்டர் சாரங்கன் அந்த ஊர்லேதான் இருக்கார். வீடு சுருக்க பாத்திடுங்க... அங்க வந்ததும் அவரை சந்திச்சி ஆசை தீரப் பேசிட்டுதான் மறு வேலை பாக்கறது'னு நூறு தரம் சொல்லிட்டா. இன்னிக்கு எதேச்சையா உங்களை சந்திச்சதை தெரிவிச்சேன்னா ஹா, ஹானு மாஞ்சு போயிடப் போறா..."

"அ...சோடா கலர்...அ...சோடா கலர்..."

பானம் விற்றுக்கொண்டு போன வாண்டு ஒருவனை 'இங்க வாப்பா' என்று அவன் அழைத்தான்.

இரண்டு கோலாவை வாங்கி, உடைக்கச் சொல்லி நான் வேண்டாம் என்று மறுக்கமறுக்க என் கையைப் பிடித்து ஒன்றை வைத்தான்.

"ப்ளீஸ் சாப்புடுங்க மிஸ்டர் சாரங்கன். இப்படி இண்டர் வெல் போது உங்களைப் பார்த்து, பேசிட்டு, திரும்பியதை ஸ்வர்ணா கேள்விப்பட்டா 'நல்லா பேசினீங்க, தாகத்துக்குக்கூட

ஒண்ணும் வாங்கிக் கொடுக்காம'னு சண்டை போடுவா. ப்ளீஸ் டேக் இட்..."

அரைவாசி குடித்துவிட்டு மீதியை போதும் என்று பையனிடம் கொடுத்தேன்.

பத்மநாபனைப் பார்த்து 'தாங்க்ஸ்' என்றேன்.

விளக்குகள் அணைக்கப்பட்டு ஸ்லைடுகள் ஓடத் துவங்கின.

அவன் எழுந்துகொண்டான்.

"அப்ப...நான் வரேன் மிஸ்டர் சாரங்கன். ஸ்வர்ணா வந்தப்புறம் உங்களை சந்திக்க கூட்டிட்டு வரேன்"

"போன் பண்ணிட்டு, நான் இருக்கேனானு தெரிஞ்சிகிட்டு வாங்க..."

"ஷ்யூர் உங்க நம்பர்?"

சொன்னேன்.

அவன் தன் ஸீட்டுக்குச் சென்றதும் படம் பார்த்தது போதும் என்று வீட்டுக்குப் போக நான் எழுந்தேன்.

இரண்டு வாரங்கள் கழித்து ஒரு நாள்.

மாலை ஐந்து மணி.

வாக் போகக் கிளம்பிக்கொண்டிருந்தபோது போன் அழைத்தது.

"ஹலோ?"

"மிஸ்டர் சாரங்கன் இருக்காரா?"

"பேசறேன்..."

"குட் ஈவ்னிங். நான் பத்மநாபன்."

"எந்த பத்மநாபன்?"

"பாங்க் ஏஜெண்ட்; அன்னிக்கு சினிமாலே பார்த்தமே?"

ஓ.எஸ். நினைவு வந்துவிட்டது.

"ஹலோ—நல்லா இருக்கீங்களா?"

"இருக்கேன் மிஸ்டர் சாரங்கன். என் வொய்ஃப் ஊர்லேந்து நேத்து வந்திட்டா. வந்ததுலேந்து உங்களை சந்திக்கணும்னு நச்சரிச் சிட்டே இருக்கா...இன்னிக்கு சாயங்காலம் ஃப்ரீயா இருக்கீங்களா? ஆறரை மணி வாக்கிலே நாங்க அங்க வரலாமா?"

யோசித்தேன்.

இப்போது ‘வாக்’ போனால் திரும்ப ஆறு ஆகிவிடும். வந்து பாதியில் நிறுத்தியிருக்கும் குறுநாவலை முடித்து நாளைக்கு ‘கல்கி’க்கு அனுப்ப வேண்டும்.

ம்ஹூம்—இன்று முடியாது.

“இன்னிக்குக் கொஞ்சம் கஷ்டப்படும், மிஸ்டர் பத்மநாபன். அவசரமா எழுத வேண்டிய வேலை இருக்கு. நாளைக்கு நான் சேலம் போறேன். நீங்க அடுத்த வாரம் போன் பண்ணிட்டு வர முடியுமா? ஐ ஹோப் யூ டோண்ட் மைண்ட்...”

வழக்கமாக இப்படி வெளிப்படையாக என் நிலையைச் சொன்னால், அதை எல்லாரும் சரியாகப் புரிந்துகொள்வார்கள் என்பது இல்லை.

—நம்மை சந்திக்க இவனுக்கு விருப்பம் இல்லை. அதான் சாக்கு போக்கு சொல்கிறான்—என்பார்கள்.

—பெரிய எழுத்தாளர் என்ற திமிர். அதை வாசகர்களாகிய நம்மிடமே காட்ட வேண்டுமா—என்பார்கள்.

—எல்லாம் சும்மா—பிஸியாக இருப்பது போல ஒரு பாவனை. உடனே சந்தித்து விட்டால் நாம் மட்டமாக நினைக்கப் போகிறோமோ என்ற பயம்—என்பார்கள்.

இந்த மாதிரி கொனஷ்டையாகப் பேசுபவர்களைச் சமாளிப்பது கொஞ்சம் கஷ்டம்தான் என்றாலும், என்னைப் புரிந்து கொள்ளாதவர்களிடம் சிரமப்பட்டாவது நிலைமையை விளக்க நானும் முயல்வதில்லை.

வேஷம் போடாமல் இருக்கிறேன். புரிந்துகொண்டால் சந்தோஷம்; இல்லாவிட்டாலும் ஒன்றும் நஷ்டம் இல்லை.

நல்லவேளையாக பத்மநாபன் இந்த ரகத்தில் சேர்ந்தவனாக இருக்கவில்லை.

நான் பேசி முடித்ததுமே தயக்கமின்றி “ஓ.கே, நீங்க போயிட்டு வாங்க, நான் அடுத்த வாரம் போன் பண்ணறேன். ஹாவ் எ நைஸ் ட்ரிப்” என்று சொல்லிவிட்டான்.

**அ**டுத்த வாரம் சொன்னபடி பத்மநாபன் போன் செய்ய, மறுநாள் மாலை அவர்களை வரச் சொன்னேன்.

என் வீடு ஊருக்கு வெளியில், எனக்குச் சொந்தமான பண்ணையில் இருக்கிறது.

சட்டென்று நினைத்தால் வரமுடியாத இடம்.

காலையில், மாலையில் என்று எண்ணி இரண்டு பஸ்கள் பண்ணை வழியாகப் போகும். மற்ற சமயங்களில் டவுனிலிருந்து ஆட்டோவோ, சைக்கிள் ரிக்ஷாவோ அமர்த்திக்கொண்டு வந்தால் தான் உண்டு. இல்லாவிட்டால், காலை வீசிப்போட்டு, நடடா ராஜா என்று ஆனந்தமாய் நடந்து வரலாம்.

வேண்டியவர்கள் எப்படியாவது வந்து சந்தித்து விடுகிறார் கள்; வேண்டாதவர்களைப்பற்றி கவலையில்லை.

நான் ஒரு வித்தியாசமான மனிதன், எனக்காக வாழும் ஜாதி; என் விருப்பு வெறுப்புகளை, என் ரசனைகளை, என் செயல்களை, எனக்காகவே வளர்த்து பராமரித்துக் கொண்டிருப்பவன். அதற் காக பிறர் உணர்வுகளை மதிக்காதவன் என்று அர்த்தம் இல்லை. எனக்குள் இரட்டை எண்ணங்கள் இல்லை, அதனால் வேஷம் போட அவசியமில்லாதவன்.

இப்படி சுலபமாய் வரமுடியாத இடத்தில் இருப்பதாலோ அல்லது அதிக ஒட்டுதல் இல்லாமல் இருப்பதாலோ, என்னமோ, நேரம் காலம் இல்லாமல் உங்கள் வாசகர்கள் என்று சொல்லிக் கொண்டு நிறைய பேர் வருவதில்லை.

—ரொம்ப ஈஷிக்கொண்டு பழகுகிற நண்பர் குழாமும் கிடையாது.

ஐந்து அடிக்க இரண்டு நிமிஷங்கள் இருக்கையில் பத்ம நாபன் மனைவி சகிதம் வந்துவிட்டான்.

அவன் கையில் ஒரு கூடை, பழங்களா?

அவள் கையில் கட்டாய் புத்தகங்கள்.

“வணக்கம்”

“வணக்கம், வாங்க”

உள்ளே வராமல் மெய்மறந்து அவள் நிற்க, ‘வா’ என்று முழங்கையைப் பற்றி பத்மநாபன் அசைத்தான்.

கூடத்து நாற்காலியில் உட்கார்ந்தோம்.

கையிலிருந்த புத்தகங்களை அவள், படபடப்பு அடங்காம லேயே பக்கத்து மேஜையில் வைக்க, அவற்றில் சில நழுவி

விழுந்தபோது பார்த்தேன்—அத்தனையும் என் புஸ்தகங்கள்தான். கர்சிப்பைத் திருகினாள். முகத்தைத் துடைத்துக்கொண்டாள். எச்சில் கூட்டி விழுங்கினாள். பார்வையை என் மேல் நிறுத்தி னாள். கூடத்தைச் சுற்றிப் பார்த்தாள்.

பத்மநாபன் நட்புடன் சிரித்தான். மனைவியைப் பார்த்து கண் சிமிட்டி சீண்டினான்.

"என்ன பேசாம இருக்கே ஸ்வர்ணா! உன்னால பேசாம கூட இருக்க முடியுமா? ஆச்சர்யமா இருக்கு! மிஸ்டர் சாரங்க னைப் பார்க்கணும்னு ஓயாம துருவினே...இப்படி வாய் அடைச்சி போயிட்டியே...என்ன சமாசாரம்..." மனைவியைச் சீண்டினவன் என் பக்கம் திரும்பி "உங்களைப் பார்த்ததுலே அவளுக்கு ஒண்ணுமே புரியலை மிஸ்டர் சாரங்கன்" என்றான்.

அவள் மெதுவாக வாய் திறந்தாள்.

"நா...நான் உங்க ரசிகை...விசிறி...உங்க எழுத்துக்கள்னா எனக்கு வெறி, பைத்தியம். இப்படி...இப்படி...உங்களை நேருக்கு நேர் இத்தனை கிட்டத்திலே பார்ப்பேன்னு நினைக்கலை...அதுதான் வந்து...வந்து..."

நான் சிரித்தேன்.

"இவ்வளவு மிரண்டு போறத்துக்கு எனக்கு இரண்டு தலை, நாலு கண்ணா இருக்கு? உங்களை மாதிரி நானும் சாதாரண மனுஷன் தானே?..."

"நீங்களா? சாதாரண மனுஷனா? இன்னொரு தரம் அப்படிச் சொல்லாதீங்க சார். உங்களுக்கு உடம்பு பூரா மூளை... நீங்க எழுதற ஒவ்வொரு வார்த்தைக்கும் உயிர் இருக்கு...உங்க கதை ஒவ்வொண்ணும் மனசைத் துளை போட்டுப் பிராண்டும்... உங்க..."

"ஸ்வர்ணாவுக்கு மூட் வந்திடுச்சு...இனிமே எந்த சக்தியாலும் அவளை நிறுத்த முடியாது..."

பத்மநாபன் வேடிக்கையாய் பேச, அவள் அவன் பக்கம் திரும்பி "சும்மா இருங்க பத்மு" என்று கொஞ்சிவிட்டு என்னிடம் தொடர்ந்தாள்.

"இங்க, இந்த அத்வானக்காட்டுலே, உட்கார்ந்துகிட்டு ஊர் மூலை முடுக்குலே நடக்குறதையெல்லாம் கச்சிதமா, பார்த்தாப்பல,

உங்களால எப்படி சார் எழுத முடியறது? வேலை இல்லாத இளைஞனை வைச்சி தொடர் எழுதினீங்களே! அது—அற்புதம்... அந்த மாதிரி பசங்க வீட்டுக்கு வீடு இருக்காங்க, சார்...'ஏன் புரியவில்லை?'—கதைலே ஆறு வயசு பெண்ணோட மன ஓட்டத்தை சித்தரிச்சிருந்தீங்களே...அடேயப்பா...எப்படி சார் அத்தனை தத்ரூபமா அந்தச் சின்னப் பெண்ணை கண் முன்னால கொண்டு வர முடிஞ்சிது? அப்புறம், உங்க கதாபாத்திரங்கள்...அகிலா, தர்மா, சங்கர், ஆத்மா, சீதா, இந்து, த்யாகு...போங்க சார், எந்த காரக்டரைச் சொல்றது, யாரை விடறது? எப்படி, எப்படி சார் வாழ்க்கைலே சந்திச்ச நபர் மாதிரியே எல்லாரையும் உருவாக்க உங்களால முடியுது? பயங்கர கற்பனை சார் உங்களுக்கு! ஹாட்ஸ் ஆஃப் டு யூ..."

பையன் கொண்டு வைத்த காபி கோப்பைகளை அவர்களிடம் நீட்டினேன்.

"கற்பனையும் இல்லே, பயங்கரமும் இல்லே...எல்லா கதாபாத்திரங்களுமே ஓரளவுக்கு இங்கே, அங்கே நான் சந்திச்சவங்கதான்..."

"அப்ப, உண்மைச் சம்பவங்களை வைச்சிகிட்டுதான் நான் எழுதறேன்னு நீங்க சொன்னதா ஒரு பத்திரிகைலே போட்டிருந்தது நிஜம்தானோ?"

"ம்ம்...வெரி ட்ரூ...பார்த்து, கேட்டு படித்து, பழகி தெரிஞ்சிகிட்ட அனுபவங்களை அடிப்படையா வைச்சிதான் நான் எழுதறேன். நிஜ வாழ்க்கைலே நடக்கறதை அப்படியே சொன்னா சில சமயங்களிலே உப்பு சப்பு இல்லாம இருக்கும். அதனால, உண்மைக் கரு, அல்லது கதாபாத்திர்த்தை எடுத்துகிட்டு இங்கே அங்கே கற்பனை சேர்த்து எழுதறதுதான். காய்கறிகளா இருக்கறதை வேக வைச்சி, பக்குவமா மசாலா சேர்த்து அவியலா நீங்க செய்யற மாதிரிதான் இதுவும்..."

ஸ்வர்ணா கண்ணகல நான் பேசுவதை உன்னிப்புடன் கேட்டாள்.

இவள் சந்தோஷம்தான் என் சந்தோஷமும் என்கிற மாதிரி பத்மநாபன் அக்கடா என்று உட்கார்ந்துவிட்டான்.

அன்றைக்கு ஸ்வர்ணா ஏகமாய் கேள்விகளைக் கேட்டாள். ஒன்றுமே படிக்காமல் காலி டப்பாவாக அலட்டும் சிலரைப் போல

அல்லாமல், ஆத்மார்த்த ஈடுபாடுடன் அவள் கேட்டது எனக்குப் பிடித்தது.

வாஸ்தவத்திலேயே அவள் நிறைய படித்திருந்தாள்; என்னுடையது என்று இல்லை, புதுமைப்பித்தனில் துவங்கி, இன்றைக்கு பிரபலமாகிக் கொண்டிருக்கும் பட்டுக்கோட்டை பிரபாகர் வரையில் படித்திருந்தாள்.

அவள் கேள்விகளில் சிரத்தை இருந்தது; தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் இருந்தது.

நான் எழுதும் அறையை அவள் பார்க்க ஆசைப்பட, அழைத்துச் சென்று காட்டினேன்.

காற்றோட்டமான அறையையும் சுவர் முழுக்க ஷெல்பாக மாற்றி அடுக்கியிருந்த புத்தகங்களையும், வசதியாய் சாய்ந்து எழுதும் மேஜை நாற்காலியையும் தடவிப் பார்த்தாள்.

எதிர் ஜன்னல் அருகில் சென்று கம்பிகளில் முகத்தைப் பதித்துக்கொண்டு அஸ்தமிக்கும் சூரியனையும், வெளியில் பரந்து கிடந்த வயல்வெளியையும் வெறித்தாள்.

"மரங்கள்—வயல்கள்...சிவந்த வானம்—அணில்கள் ஓணான்கள்—பட்சிகள்—சார்—இப்பத்தான் புரியுது உங்க கதை களிலே இதுங்களுக்கு ஏன் இத்தனை முக்கியத்துவம்னு—இயற்கையை அனுபவிச்சி நீங்க எழுதறதாலதான் எங்களையும் அத்தனை லயிக்கச் செய்யறீங்க..."

மீண்டும் கூடத்துக்கு வந்த பிறகு கொண்டுவந்திருந்த புத்தகங்களை என் முன் நீட்டி, "கையெழுத்து போட்டுத் தாங்க, ப்ளீஸ்" என்றாள்.

நான் போட்ட நிமிஷத்தில் பக்கத்தில் நின்றுகொண்டு "உங்களைப் பார்க்கப் போறேன்னு தெரிஞ்சதுமே, உங்க பப்ளிஷர் கிட்ட போயி இருந்த அத்தனை புஸ்தகங்கள்லேயும் ஒரு காப்பி வாங்கிட்டு வந்திட்டேன்..." என்று அதீத உற்சாகத்துடன் பேசினாள்.

நடுநடுவில் தங்களைப் பற்றியும் புருஷனும், மனைவியுமாய் மாறிமாறி விவரங்கள் சொன்னார்கள்.

இருவருமே வசதியான குடும்பத்தைச் சார்ந்தவர்கள். அவன் எம்.ஏ., அவள் பி.எஸ்.ஸி கெமிஸ்ட்ரி. திருமணமாகி பத்து ஆண்டுகள் ஆகின்றன. ஒன்பது வயசில் ஒரு பெண் மாதவி—

இங்கு அழைத்து வந்து, திரும்ப இரண்டு வருஷத்தில் ட்ரான்ஸ்பர் என்றால், படிப்பு பாதியில் திண்டாடுமே என்று சென்னை யிலேயே பெற்றவர்களிடம் விட்டு வைத்திருக்கிறார்கள்.

அன்று அவர்கள் கிளம்பும்போது மணி ஏழரை என்றது.

அதிசயமாய், அத்தனை நாழிகை அவர்களுடன் பொழுதைக் கழித்தது எனக்கே வேடிக்கையாக இருக்க வண்டி வரை வழி அனுப்பச் சென்றேன்.

காரில் ஏறுமுன் ஸ்வர்ணா சுற்றி ஒரு தரம் பார்த்தாள்.

"இது பூரா உங்க பண்ணைதானா சார்?"

"ம்ம்—"

"எவ்வளவு ஏக்கர் இருக்கும்?"

சொன்னேன்.

"அம்மாடி! அத்தனாம் பெரிசா? நீங்க ஒருத்தராவா இத்தனையும் பார்த்துக்கறீங்க?"

"ம்ம்"

சற்றுத் தயங்கி வந்தது, அடுத்த கேள்வி—

"உங்க கூட இங்க யார் இருக்காங்க?"

"யூ மீன் உறவுக்காரங்க? யாருமில்லே..."

"இத்தனாம் பெரிய இடத்துலே தனியாவா இருக்கீங்க?"

நான் சிரித்தேன்.

"தனியா எங்க இருக்கேன்? ஆட்கள் இருக்காங்க. ரெண்டு நாய் இருக்கு. அப்புறம்..."

"இல்லே சார். நான் கேட்கறது..."

ஏதோ கேட்கப் போனவளைத் தடுத்து நிறுத்தும் நோக்கில் பத்மநாபன் அவசரமாய் பேசினான்.

"நாழியாச்சு ஸ்வர்ணா...சார் டைமை நாம அதிகமா எடுத்து கிட்டோம்...அவருக்கு இன்னும் எத்தனை வேலை இருக்கோ... கிளம்பலாம்...வா..."

"உங்களுக்கு போன் பண்ணிப் பேசலாமா சார்? தொந் தரவுனு நினைக்க மாட்டீங்களே!" என்று கேட்டு நான் இல்லை என்று சொன்ன பிறகு அவர்கள் கிளம்பிச் சென்றார்கள்.

உள்ளே போய் சாப்பிட்டு, நீட்ஷேயை கையில் எடுத்துக் கொண்டு படுக்கையில் சாய்ந்த பிறகும் கூட அவர்கள் நினைப்பு எனக்குள் எழுந்துகொண்டே இருந்தது.

கலகலப்பான ஜோடி.

இவருவருமே வெகுளிகள். ஆனால் புத்திசாலிகள்.

வேஷம் இல்லை. பணம் இருக்கிறது என்ற பகட்டும் இல்லை.

அவர்களை எனக்குப் பிடித்துப் போனதை நினைத்துக் கொண்டே உறங்கிப் போனேன்.

சரியாக இரண்டாம் நாள் காலை ஸ்வர்ணா போனில் என்னை அழைத்தாள்.

"ஸ்வர்ணானு ஒரு அம்மா பேசறாங்க"—என்று வேலைக் காரன் சொன்னதும் எழுதிக்கொண்டிருந்த பேனாவைக் கீழே வைத்துவிட்டு பேசலாமா வேண்டாமா என்று அரை நிமிஷம் யோசித்தேன்.

யாரோடும் அத்தனை பழக்கம், நெருக்கம் வேண்டாம் என்று ஒதுங்கி வாழும் இயல்பு—அடிக்கடி பேச்சு வைத்துக்கொள்வது தேவையா—என்று கேட்டது.

பேசின வரைக்கும் குற்றமாக எதுவும் படாததாலும், அந்த முகத்தில், குரலில் தெரிந்த ஆர்வம் நிஜமாக பட்டதாலும், பரவா யில்லை பேசலாம் என்று தீர்மானித்து ரிஸீவரை எடுத்து "ஹலோ" என்றேன்.

"குட் மார்னிங் சார்...காலைல தொந்தரவு செய்யறத்துக்கு மன்னிக்கணும். விகடன் தொடரைப் படிச்சப்புறம் சும்மா இருக்க முடியலை. ரெண்டு வார்த்தையாவது அதைப் பத்தி பேசணும்னு துடிப்பா இருக்கு...ஒரு இடத்துலே எத்தனை அழகா விளக்கம் கொடுத்திருக்கீங்க சார்!—'சமுத்திரத்தையே பார்க்காதவனிடம், ஒரு டபரா ஜலத்தைக் கொண்டு வந்து கொட்டி, இந்த மாதிரி லட்சோப லட்சம் டபரா ஜலம் சேர்ந்த பரந்த நீர்ப்பரப்பில் வெள்ளையாய் அலைகள் இருக்கும், பெரியபெரிய கப்பல்கள் மிதக்கும், அடியில் பிரும்மாண்டமான திமிங்கலம் வகையறாக்கள் சஞ்சரிக்கும், முத்து பவழங்கள் விளையும்—என்று எப்படி யெல்லாமோ விளக்கினாலும் கூட அவனால் ஒரு சமுத்திரத்தின் அழகை, கம்பீரத்தை வாஸ்தவமாகக் கற்பனை பண்ணிப் பார்க்க

முடியுமா?'—னு எழுதியிருக்கறதை படிச்சிட்டு அசந்து போயிட்டேன்! வார்த்தைகளால் மட்டும் சில விஷயங்களைப் புரிய வைக்கிறது கஷ்டம்னு தெளிவா விளக்கிட்டீங்க......அப்புறம்..."

அன்றைக்கு அவள் ஒரு நல்ல ரசிகையாக, நான் எழுதியிருந்ததை என் கோணத்திலிருந்தே ஆராய்ந்து விமர்சித்தது எனக்குத் திருப்தியைத் தந்தது.

வெறும் முகஸ்துதிக்காக பேசி, பிரபலமான இவர் தொடர்பு நமக்குப் பெருமை தரும் என்ற கணேணாட்டம் இல்லாதது நன்றாகப் புரிந்ததால் அவளுடைய விமர்சனங்களை, மற்ற எழுத்தாளர்களின் எழுத்துக்கள் பற்றிய கருத்துக்களை நான் வரவேற்க முற்பட, சீக்கிரமே—ஒரு வாரத்துக்கு ஒரு தரம் நாங்கள் பேசுவது, நாலு நாட்களுக்கு, அப்புறம் இரண்டு நாட்களுக்கு ஒரு முறை என்று ஆயிற்று.

அந்த முறை என் இல்லத்துக்கு வந்தவர்கள் 'அவசியம் எங்க வீட்டுக்கு ஒரு நாள் விருந்து சாப்பிட வாங்க சார்; எத்தனை முறை கூப்பிட்டுட்டோம்...' என்று ஏக்கத்துடன் அன்புடன் அழைக்க செவ்வாய் அன்று இரவு உணவுக்கு வருவதாகச் சொன்னேன்.

ஸ்வர்ணா பேச்சில், பத்திரிகை, புத்தகங்கள் படிப்பதில் மட்டும் கெட்டிக்காரி அல்ல; புத்திசாலி, ரஸனை உள்ளவள், கைக்காரியத்தில் தேர்ந்தவள் என்பது அன்று எனக்குப் புரிந்து போனது.

வரவேற்பு அறை சுவரில் பெண் குழந்தை ஒன்று விளக்கு வெளிச்சத்தில் படிப்பது போன்ற ஓவியம்; சாப்பாட்டுக் கூடத்தில் சீவின மரச்சுருளால் செய்யப்பட்ட கீதோபதேசம்.

"மத்தியான நேரங்களிலே பொழுது போக வேண்டாமா சார்? தூங்கியே நேரத்தைக் கழிச்சா, எப்படி?"

பிஸிபேளாஹுளி அன்னாவும், பால் பாயஸமும் நாவை மணக்க வைத்த பின் வயிற்றில் இறங்கின.

"நீங்க ரொம்ப அதிருஷ்டக்காரரர் பத்மநாபன். எல்லாம் தெரிஞ்ச மனைவி அமைஞ்சிருக்காங்க..." என் பாராட்டில் பத்மநாபன் குளிர்ந்து போனான்.

"இவ செய்திருக்கிற மற்ற பெயிண்டிங்களையும் நீங்க பார்க்கணும் சாரங்கன் (மிஸ்டரை விட்டுவிடுங்கள் என்று நான்

கேட்டுக்கொண்டிருந்தேன்) அந்த க்ராஸ் ஸ்டிச் படுக்கை விரிப்பைக் காட்டு ஸ்வர்ணா...”

முகத்தில் பெருமை கூத்தாட அவன் அவளை இன்னும் தூக்கி வைத்துப் பேச, ஸ்வர்ணா சந்தோஷமாய் “எல்லாத்துக்கும் இவங்க கொடுக்கற உற்சாகம்தான் காரணம் சார்...முதுகிலே தட்டிக் கொடுக்கக்கொடுக்க நான் நல்லா வேலை செய்யறேன். ரகஸியம் அங்கதானே இருக்கு” என்றாள்.

முழுசாய் ஒரு நிமிஷம் அவர்கள் இருவரையும் மாறிமாறிப் பார்த்தேன்.

அந்த அன்பு, அந்தப் பெருமை, அந்த ஈடுபாடு...

சரியான ஜோடிதான்...

காட் ப்ளெஸ் தெம் போத்...

இதற்குப் பிறகு நான் ஊரில் இருந்தால் கண்டிப்பாய் தினமும் ஸ்வர்ணா என்னிடம் ஒரு தடவையாவது பேசிவிடுவது வழக்கமாயிற்று.

அந்த வாரத் தொடர் பற்றிதான் பேச்சு இருக்கும் என்று இல்லை; எப்போதோ எழுதின சிறுகதையைக் குறிப்பிட்டு “அந்த முடிவு இயற்கையில் நடக்கக் கூடாதா, சார்” என்று விவாதிப்பாள். இல்லாவிட்டால் சமீபத்தில் வெளியான கட்டுரைத் தொகுப்பைப் பற்றின அபிப்பிராயங்களைக் கூறுவாள்.

“—எழுத்தாளர் பெண் எழுத்தாளர்களைக் காட்டமாக விமர்சித்திருக்கிறாரே, அதைப்பற்றி உங்கள் கருத்து என்ன சார்?”—

“—இப்ப வந்திட்டிருக்கே, குமுதத்திலே ஒரு தொடர்... இவரோடது. அதைப் படிக்கிறீங்களா?”—

—“சிறுகதை இலக்கியம் க்ஷீணமடைஞ்சிட்டு வருதுனு சிலர் அபிப்ராயம் தெரிவிச்சிருக்காங்களே—நீங்க என்ன சொல்றீங்க?”—

—“கமர்ஷியல் மாகஸின் ஆர்ட் மாகஸீன்னு பிரிவு இருக்குனு நீங்க நம்பறீங்களா?”—

—“ஜே. கேயோட ‘எய்ட் கான்வர்ஸேஷன்’ படிச்சிட்டு இருக்கேன்...அதுலே The observation of silence by silence in silence—னு சொல்றார்; எனக்குப் புரியலை; விளக்குங்களேன்...”

—"பிறப்பால இல்லாம அவங்கஅவங்க குணங்களுக்கு ஏற்ப செய்யற கர்மத்தால ஜாதி தீர்மானிக்கப்படுது...னு கீதை பதினெட்டாவது அத்தியாயத்திலே நாற்பத்தி ஒண்ணாவது ஸ்லோகம் சொல்லுது. இதை அடிப்படையா வைச்சி, நீங்க ஒரு அற்புதமான சமூக நாவலை எழுதணும்னு ஆசைப்படறேன் சார்..."

அத்தனைக்கும் நான் கூறும் பதிலை குறுக்கே எதுவும் பேசாமல் கவனமாய் கேட்பாள்; சில விளக்கங்களை ஏற்றுக் கொள்ளாமல் 'அது எப்படி சார்'—என்று பதிலுக்கு வாதாடுவாள்; பல சமயங்களில் 'என்னமா, தெளிவா சொல்லறீங்க!' என்று பூரித்துப் போவாள்.

நடுநடுவில் "ஏன் சார் நீங்க கல்யாணம் பண்ணிக்கலை? எதுக்காகவும் இல்லாட்டாலும் வயசான பிறகு நம்மைப் புரிஞ்சிகிட்டு இதமா நடத்தவாவது ஒரு துணை வேணாமா?"—என்று சொந்த சமாசாரத்தைப் பற்றின கேள்விகளும் கேட்டதுண்டுதான்.

பதில் சொல்ல விருப்பம் இருப்பதற்கு சொல்வேன்—இல்லாததற்கு சிரித்துக்கொண்டே பேசாமல் இருந்து விடுவேன்.

மொத்தத்தில் ஸ்வர்ணாவை ஒரு ரசிகையாக மட்டும் நினைக்காமல் ஆர்வமுள்ள சிஷ்யையாக, ஒரே கண்ணோட்டமுள்ள ஸ்னேகிதியாகவும் நான் நினைத்ததும், அதனால் பழகத் துவங்கி மூன்று மாசங்கள் போவதற்குள் அழுத்தமான, இனிய நட்பாக எங்களுடையது உருவானதும் நிஜம்தான்.

**அ**ந்தக் கோடை விடுமுறையில் முதல் முதலாக நான் மாதவியை சந்தித்தேன்.

முதல் பார்வையிலேயே அசந்துதான் போனேன்.

ஒன்பது வயசு பெண்ணுக்கா? இத்தனை அழகா? துறுதுறுப்பா? புத்திசாலித்தனமா?

என்னைப்பற்றி அவள் பெற்றோர்—முக்கியமாய் தாய்—அதீதமாய் பேசி அவள் கேட்டிருக்க வேண்டும்.

"நீங்கதானா அந்த சாரங்கன் அங்கிள்?"—என்றாள் கண்களை அம்மா மாதிரியே அகல விரித்தபடி.

எண்ணி இரண்டாம் நிமிஷம் ஸ்வாதீனத்துடன் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு கலகலக்கத் துவங்கிவிட்டாள்—இதுவும் அம்மாவின் குணம்தான்—

வழக்கமாக, சின்னக் குழந்தைகளிடம் அதிகம் பட்டுக் கொள்ளாத நான் ஏனோ தெரியவில்லை, மாதவியிடம் மாத்திரம் ரொம்ப சீக்கிரம், ரொம்ப நெருங்கித்தான் போனேன்—

எனக்குப் பிடித்த நண்பர்களின் மகள் என்பதாலா?

உயர்ந்த நட்பு தரும் ஸ்னேகிதியாய் இருக்கும் ஸ்வர்ணாவின் குணங்களை இவளும் கொண்டிருந்ததாலா?

உண்மையிலேயே கெட்டிக்காரியாய், சமர்த்தாய் மாதவி இருந்ததாலா?

யோசித்த வரையில் ஒன்று மட்டும் காரணம் அல்ல; எல்லாம் தான் என்றே புரிந்தது.

மாதவி வந்த பிறகு அவர்கள் இங்கு வருவதும் நான் அங்கு போவதும் அதிகமாயிற்று.

பண்ணை வேலைகளை—பம்பிலிருந்து திமுதிமுவென்று தண்ணீர் கொட்டி, வயலுக்குப் பாய்வதையும், தென்னை மாமரங் களில் ஏறி ஆட்கள் காய் பறிப்பதையும், பயிர்களுக்குப் பூச்சிமருந்து அடிப்பதையும் ஸ்வராஸ்யத்துடன் மாதவி காணப் பிரியப்பட்ட தால் பல நாட்கள் காலை டிபன் ஆனதும், பத்மநாபனுக்கு சமைத்து டேபிள் மேல் வைத்து மூடிவிட்டு, எனக்கும் எதையாவது எடுத்துக்கொண்டு பத்து மணி அளவில் சைக்கிள் ரிக்ஷாவில் மகளுடன் ஸ்வர்ணா பண்ணைக்கு வந்துவிடுவாள்.

பம்பு ஷெட்டில் மாதவி குளிக்க, மரத்தடியில் அமர்ந்து ஸ்வர்ணாவும் நானும் எதையாவது அலசிப் பேசுவோம்.

மாலையில் அவர்களை என் வண்டியில் கொண்டு விட்டு விட்டு, அப்படியே அரை மணியோ ஒரு மணியோ இருந்து பத்ம நாபனுடன் பேசிவிட்டு நான் திரும்புவேன்.

அந்த மாதிரி பேசின ஒரு நாளில்தான் மாதவி தற்சமயம் படிக்கும் பள்ளி அத்தனை உயர்வானது இல்லை என்று ஸ்வர்ணா குறைபட்டுக்கொண்டாள்.

"சரி—பிடிக்கலைனா ஏன் தொடர்ந்து அங்கேயே படிக்க வைக்கணும்? மாத்திடறது!"

ஸ்வர்ணா, 'என்ன நீங்கள்?'—என்கிற ஆச்சர்யப் பார்வையை வீசினாள்.

"அதெல்லாம் சொடுக்குற மாதிரி அத்தனை சுலபம்னு நினைச்சிங்களா சார்?"— ('இந்த சாரை விடு'—என்று நான் சொல்லி, 'சார்'னு கூப்பிட்டாதான் மரியாதையா இருக்கு சார்'—என்று அவளும் தீர்மானமாக பதில் சொல்லிவிட்டாள்)

"பெண் கெட்டிக்காரி. நீங்க வசதியுள்ளவங்க, அப்புறம் என்ன?"

ஸ்வர்ணா சிரித்தாள்.

"உங்களுக்கு அனுபவமில்லாததால இப்படிச் சொல்றீங்க; நான் ஆசைப்படற ஸ்கூல்லே சேர்க்கறதுன்னா லேசு இல்லே... ரெண்டு வருஷம் முனைஞ்சி பார்த்திட்டு விட்டுட்டோம்."

"எந்த ஸ்கூல்?"

சொன்னாள்.

"அது என்ன அப்படி உசத்தி?"

"ஸிலபஸ் எல்லா ஸ்கூல்லேயும் ஒண்ணுதான். ஆனாலும் இதுலே பசங்களை நடத்துற விதம், பாடம் சொல்லிக் குடுக்குற விதம் அலாதியா இருக்கு...ஸ்கூல் ஃபைனல் முடிச்சிட்டு பசங்க வெளிலே வர்றப்போ, புத்தியோட வாழ்க்கை பற்றின கண்ணோட்டம், பொறுப்பு, விவேகத்தையும் வளர்த்துக்க அந்தப் பள்ளிக்கூடப் படிப்பு உதவுது..."

"ம்ம்."

நான் மேலே அது குறித்து அவளிடம் எதுவும் பேசவில்லை. ஆனால் இரவே எனக்குத் தெரிந்த பத்திரிகை அதிபர்—நண்பரிடம் பேசினேன்.

நண்பர் செல்வாக்கு உள்ளவர்.

அரசாங்கம், தனியார் துறை, தனிப்பட்ட நபர் என்று அத்தனை பேரிடமும் தொடர்பு உள்ளவர்.

விவரத்தைச் சொன்னேன்.

"ஆச்சர்யமா இருக்கு சாரங்கன்! நீங்ககூட ஒரு உதவி கேட்டுட்டீங்களே...நடந்திடுச்சினு வைச்சிக்கங்க..." என்றவர் சொன்ன வார்த்தை தப்பாமல் மறுநாள் காலை திரும்ப அழைத்து "உங்க மாதவிக்கு அட்மிஷன் கிடைச்சாச்சு...பத்தாம் தேதி வந்து பிரின்ஸிபாலைப் பார்க்கச் சொல்லுங்க" என்றும் கூறிவிட்டார்.

போனில் சொல்ல வேண்டாம் என்று மாலையில் அவர்கள் வீட்டுக்குப் போய் விஷயத்தைச் சொன்னேன்.

ஸ்வர்ணாவுக்குத் தலைகால் புரியவில்லை.

மாதவி ஆகாசத்துக்கும், பூமிக்கும் அம்மாவுக்கு ஜோடியாய் குதித்தாள்.

"பாத்திங்களா பத்மு? சாதாரணமாதான் சொன்னேன்—வேணும்னு வாயைத் திறந்துகூடக் கேட்கலை. ஆனாலும் மனசுலே இருக்கறதைப் புரிஞ்சிகிட்டு இவர் காரியத்தை முடிச்சு கொடுத்திட்டார், பாத்திங்களா?"

"இந்த மாதிரி ஸ்னேகிதர் வேற யாருக்கும் கிடைக்க மாட்டார். நம்ம அதிருஷ்டசாலிங்க, என்ன பத்மு?"

"உங்களால, நம்மால முடியாததை இவர் எத்தனை சுலபமா செஞ்சிட்டார்! அதுவும் இருக்குற இடத்தை விட்டு அசையாமல்!" வாய் ஓயாமல் ஸ்வர்ணா பேசினாள், சந்தோஷித்தாள்.

இத்தனை குதூகலம் ஏனோ பத்மநாபனிடம் இல்லை. ஆண் என்பதால் காட்டிக்கொள்ளாமல் இருக்கிறானோ?

"தாங்க்ஸ் சாரங்கன்"—என்று மட்டும் சொன்னான். அப்புறம் என்னமோ யோசிக்கும் பாவனையில் ஒதுங்கி இருந்துவிட்டான்.

பத்து நாட்களாகவே பத்மநாபன் இப்படித்தான்—அதிகம் பேசாமல் சிரிக்காமல், கொஞ்சம் யோசனையுடன் இருக்கிறான் என்பது நினைவுக்கு வர, அவன் பக்கம் திரும்பினேன்.

"பாங்கிலே ஏதாவது ப்ராப்ளமா?"

"ம்ஹூம்"

"உடம்புக்கு ஒண்ணும் இல்லியே?"

"ஏன் கேட்கறீங்க?"

"இல்லே—கொஞ்ச நாளா டல்லா, ராதர் ஓர்ரிடா இருக்குற மாதிரி பட்டுது அதான்..."

பத்மநாபன் மறுக்கும் முன் ஸ்வர்ணா அவசரமாய் பேசினாள்.

"பாத்திங்களா பத்மு?...நாலு நாளா நான் கேட்கறேன்—ஏன் எப்படியோ இருக்கீங்கனு—ஒண்ணும் இல்லே—சும்மா கற்பனை

பண்ணிக்காதேனு சொன்னீங்க...இப்ப சார் கேட்கிறார்! நான் சொல்லிக் கொடுத்தா கேட்கிறார்? பாருங்க..."

பத்மநாபன் அவளை முறைத்தான்.

ப்ச் என்று அதட்டினான்.

"ஒண்ணுமில்லாததை ஏன் பெரிசுபடுத்தறே? இன்டர்னல் ஆடிட் நடக்குது...அதுதான் கொஞ்சம் டென்ஷன்..."

எரிச்சலுடன் அவன் பேசியதாகத் தோன்ற விஷயத்தை அத்துடன் நான் விட்டுவிட்டேன்.

**மா**தவியைப் பள்ளியில் சேர்க்க ஸ்வர்ணா சென்னைக்குப் போய்விட்டாள். வேலை இருந்ததால் பத்மநாபன் உடன் போக வில்லை.

எனக்கு மதுரை ரோட்டரியிலும், யூனிவர்ஸிடியிலும் பேச அழைப்பு வந்திருந்தது.

போனவன் அப்படியே கொடைக்கானலுக்குச் சென்று பத்து நாள் தங்கி ஒரு நாவலை எழுதி முடித்தேன்.

அங்கே இருக்கும்போது பத்மநாபன் ஸ்வர்ணாவின் திருமண நாள் அந்த புதன்கிழமை என்பது நினைவுக்கு வர, ஸி.எல்.எஸ். கடைக்குச் சென்று ஒரு வாழ்த்து அட்டை வாங்கி 'குறுகிய காலத்தில் என் இனிய நண்பர்களாகிவிட்ட ஸ்வர்ணா, பத்மநாப னுக்கு'—என்று எழுதி அனுப்பினேன்.

க்ரீடிங்ஸையும் அதில் நான் எழுதியிருக்கும் வாசகத்தையும் கண்டுவிட்டு ஸ்வர்ணா எப்படி தேன் குடித்த நரியாக ஆடுவாள் என்பதைக் கற்பனை பண்ணிப் பார்த்தபோது எனக்கு சிரிப்பு வந்தது.

ஊருக்குத் திரும்பினேன்.

கொடையில் வாங்கிய ப்ளம், பேரிகளுடன், வரும் வழியில் மதுரையில் வாங்கிய ஹல்வாப் பெட்டியையும் எடுத்துக்கொண்டு மாலையில் அவர்கள் வீட்டுக்குச் சென்றேன்.

நான் சென்றபோது பத்மநாபன் இல்லை.

"வாங்க சார்...வாங்க...எப்ப வந்திங்க? பத்முவா? பாங்கிலே ருந்து இன்னும் வரலை...வரவர நேரத்தோட அவர் வீட்டுக்கு

வரதேயில்லை...கேட்டா வேலை இருக்குதுனு சள்ளுனு விழறார்... ரொம்பக் கோபக்காரராயிட்டு வரார்...ஒண்ணும் புரியலை...அது கிடக்கட்டும், நீங்க எப்ப சார் வந்திங்க? உங்களைப் பார்த்து பதினைஞ்சு நாளாச்சு! பேசறத்துக்கு எத்தனை விஷயம் இருக்கு தெரியுமா?"

கொண்டுவந்த சாமான்களை நீட்டினேன்.

வெட்டிங் டே கார்ட் பற்றி ஏதாவது சொல்லுவாள் என்று எதிர்பார்த்தேன்.

ம்ஹூம்...இல்லை...

கால் மணியில் பத்மநாபன் வந்தான்.

வரும்போதே முகம் சரியாக இல்லாத மாதிரி பட்டது.

என்ன விஷயம்?

"ஹலோ"—என்றான்.

உள்ளே போய்விட்டான்.

குளித்து, உடை மாற்றிக்கொண்டு அவன் வருவதற்குள் வளவளவென்று பேசியபடியே ஸ்வர்ணா சாப்பிட ஆயத்தம் செய்தாள்.

சாப்பிட உட்கார்ந்தோம்.

நான் கொண்டு போயிருந்த ஹல்வாப் பெட்டியைத் திறந்து ஸ்வர்ணா மூவருக்கும் பரிமாறினாள்.

தன் இலையில் வைத்துக்கொண்ட துண்டத்தை சாப்பிட்டு விட்டு 'நல்லா இருக்கு சார்' என்று பாராட்டினதும் விசுக்கென்று பத்மநாபன் தலை நிமிர்ந்தான்.

"நேத்து நான் அகர்வால் பவன்லேந்து வரவழிச்ச ஸ்வீட்டை 'ஐய வேணாங்க—வெயிட் போடும்'னு எடுத்துக்க மறுத்தவ, இன்னிக்கு ரசிச்சு சாப்பிட்டு, பாராட்டறியே! ஸோ, நான் வாங்குறது உனக்குப் பிடிக்கலை. சாரங்கன் கொண்டு வர்றது உசத்தி—அதானே?"

வாயில் போட்ட ஹல்வாத் துண்டை விழுங்க முடியாமல் சில கணங்கள் நான் சங்கடப்பட்டேன்.

இது என்ன அசட்டுக் கேள்வி?

விளையாடுகிறானா, இல்லை மனசில் எதையோ வைத்துக் கொண்டு கேட்கிறானா?

ஆயிற்று என்று சாப்பிட்டுவிட்டுக் கிளம்பினேன்.

கார் வரையில் ஸ்வர்ணா வந்தாள்.

"பத்முவுக்கு ஏதோ கவலை...அதான் அப்படிப் பேசிட்டார், நீங்க தப்பா எடுத்துக்காதீங்க, சார்"

அவளைத் தேற்றும் தினுசில் நான் சிரித்தேன்.

காரில் உட்கார்ந்து இஞ்சினை ஆன் செய்தபோது மனசின் பிரண்டல் தாங்காமல் "வெட்டிங் டேக்கு நான் அனுப்பின கார்ட் கிடைக்கலியா ஸ்வர்ணா"—என்றேன்.

"கார்டா? உங்களுதா? இல்லையே சார்!"

கார்ட் போஸ்டில் தவறிவிட்டதா!

இல்லை?

அன்று இரவு என்னால் ஏனோ நிம்மதியாய் உறங்க முடிய வில்லை. எங்கோ என்னவோ தவறு நிகழ்ந்துவிட்ட மாதிரி உறுத்தியது.

என்ன?

எ...ன்...ன?

மறுநாள் காலை ஒன்பது இருக்கும். போனில் ஸ்வர்ணா அழைத்தாள்.

"சார்...சார்" என்றவள் மெல்ல விசும்ப முற்பட்டாள்.

"என்ன ஸ்வர்ணா?...வாட் ஹாபண்ட்?"

அடிவயிற்றில் சின்னச்சின்ன முடிச்சுகள்...

ராத்திரி நான் போன பிறகு ஸ்வர்ணா கணவனிடம் வெட்டிங்டே கார்ட் பற்றி கேட்டு, கூடவே, 'ஏன் அவரிடம் அப்படிப் பேசினீர்கள்?' என்று உரிமையுடன் சண்டை போட, பத்மநாபன் வெடித்திருக்கிறான்.

"எழுத்தாளர்—ரசிகைன்னா அளவோடு உறவு இருக்கணும்; ஊரெல்லாம் சிரிக்கிற மாதிரி, வம்பு பேசற மாதிரி ஸ்னேகம் இருக்கக் கூடாது. பகல் பொழுதெல்லாம் நீ அங்க பண்ணைலே

இருக்கறதும், ராத்திரி அவன் இங்கே வர்றதும்...ச்சேச்சே...மாதவிக்கு இவன் யார் ஸீட் வாங்கித்தர? என்னை—பெத்தவனை மதிச்சு ஒரு வார்த்தை கேட்டானா? அப்பா மாதிரி, பெரியப்பா மாதிரினு நீ மாதவிகிட்ட சொல்லறதும், அவனை ஆஹா ஊஹானு கொண்டாடறதும்—ஐ காண்ட் ஸ்டாண்ட் திஸ் நான்ஸென்ஸ்... ஆமாம், வெட்டிங் டே கார்ட் அனுப்பினதை நான் வேணும்னேதான் காட்டலை...எனக்கு இதெல்லாம் ஒண்ணும் பிடிக்கலை... ஏண்டாப்பா இந்த ஊருக்கு வந்தோம்னு கூட இருக்கு...''

மை காட்...

பத்மநாபன் சிந்தனை இத்தனை வக்ரமாகவா போய் விட்டது?

அவன் மனசில் இப்படியொரு அசிங்கம் எப்போது புகுந்து கொண்டது?

மனித இயல்புகளைத் துல்யமாக அறியும் நான் இதை எப்படி துவக்கத்திலேயே கண்டுகொள்ளாமல் போனேன்?

“சார்...சார்...நா...நான் என்ன சார் பண்ணுவேன்...எனக்கு மனசே சரியில்லே சார்—உங்களையும்—என்னையும் ஐயோ...சார்...''

பேச முடியாமல் அவள் அழ, “கவலைப்படாதே ஸ்வர்ணா—எல்லாம் சரியாயிடும். பத்மநாபன் ஏதோ ஒர்ரிலே இருக்கார்—அதான் அப்படிப் பேசிட்டார். சீக்கிரமே புரிஞ்சிக்கிடுவார்...'' என்று தேற்றிவிட்டு போனை வைத்தேன்.

நல்ல ஜோடி—பொருத்தமான தம்பதி என்று நினைத்து சந்தோஷித்த உறவில் விரிசலா? அதற்குக் காரணம் நானா?

ஓ. நோ...

இது கூடாது...

இதமான நட்பின் வளர்ச்சி, ஆரோக்கியமான தாம்பத்திய உறவைப் பாதித்து, அழுக வைக்கிறதா?

இது தவறு அல்லவோ?

நட்பை விட, உறவுக்கு ஆயுசு அதிகம். அப்படித்தான் இருக்க வேண்டும்.

அது அழுகக் கூடாது.

அது பலவீனப்பட்டுப் போகக் கூடாது.

மதியத்துக்குள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன்.

பண்ணை மேஸ்திரி, வாட்ச்மேன், சமயல்காரப் பையன் எல்லாரையும் அழைத்தேன்.

"கதைக்கு விவரம் சேர்க்கறத்துக்காக வெளியூர் போக வேண்டி இருக்கு...தோட்டத்துலே இன்னென்ன செய்யணும்னு குறிச்சி வைச்சிருக்கேன்...அதுபடி கவனிச்சிக்குங்க...யார் கேட்டாலும், 'ஐயா வெளியூர் போயிருக்கார், மத்த விவரம் தெரியாது'னு சொல்லிடுங்க...நான் அப்பப்ப போன் மூலமா தொடர்பு கொள்கிறேன்..."

"என்னங்க திடும்னு?"—வியந்து நின்றவர்களுக்கு ஒரு புன்னகையைப் பதிலாகத் தந்துவிட்டு பெட்டி, இதர அத்யாவசிய சாமான்களுடன் காரில் ஏறுகையில் இது நாழிகை அலைபாய்ந்த மனசு, நீ எடுத்த முடிவு சரியானது என்று முணுமுணுத்தபடி அடங்க ஆரம்பிப்பது புரிகிறது.

— *கல்கி, 1982*